

உ

சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

மலர் 13 ] ஏப்ரல் 1998 [ இதழ் 10

பெருமைதரு ஆசிரியர் : M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)








1998
ஏப்ரல்
மலர் 15
இதழ் 10

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

**நமது சிந்தனைக்கு :**

## 'பிரான் என்று அறிந்தேனே'

என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானுமுன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யான்என்(று) அறிதலும்
தன்னை நானும் பிரான்என்(று) அறிந்தேனே.

—திருநாவுக்கரசர்

எம்பெருமான் என்னைத் தன் அடியவனாக முதலில் சிறிதும் சங்கற்பிக்கவில்லை; அதுவரை நானும் எம்பெருமானை முதலில் சிறிதும் அறிந்துகொள்ளவில்லை. பெருமான் என்னைத் தனது அடியவனாகக் கருதியவுடன் நானும் அவரைத் தலைவரென்று அறிந்து கொண்டேன்.

பெருமானை அறிதற்கும் அவர் திருவருளே வேண்டுமாதலாலும் அது இன்றி எதுவும் நிகழாதாதலாலும் இவ்வாறு கூறினார்.

---

**மனம், உண்மை பேசுவதால் தூய்மை ஆகிறது**

—தர்மசாரம்



# மனமாற்றமே மருந்து

**(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்)**



''மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும்''

[மக்கள் மனந்திருந்தினால் அல்லாது நாடு திருத்தமுற இயலாது என்ற அடிப்படையை விளக்கி, சமுதாயத்தில் மாந்தர்க்குத் தகுதியும் பக்குவமும் உரியவர்களால் புகட்டப்பெற வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்தி, சைவர்களாக இருப்பவர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகளைச் சுட்டி நிறைகிறது இக்கட்டுரை ]

'வையம் துரகம் மதகரி மாமகு டம்சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை ஆரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாள்அடித் தாமரைக்கு அன்புமுன்பு
செய்யும் தவமுடை யார்க்குஉள வாகிய சின்னங்களே''

— அபிராமி அந்தாதி

**திருவலம்புரத் தரிசனம் :**

கீழப்பெரும்பள்ளம் – மேலப்பெரும்பள்ளம் ஆகிய இரு தலங்களிலும் எழுந்தருளியுள்ள இறைவனையும் இறைவியையும் ஆடி வெள்ளிக்கிழமையாகிய இன்று வழிபடும்பேறு நமக்குக் கிடைத்தது. எந்த ஒரு செயலும் நடைபெற வேண்டுமானால் அதற்கு ஓர் அடிப்படையான காரணம் வேண்டும். காரணம் இன்றி ஒருபோதும் காரியங்கள் நிகழா. நாமே இத்தலங்களைத் தரிசிக்க நினைத்திருந்தாலும், இப்போது இங்குள்ள அன்பர்கள் அழைத்த காரணத்தாலேயே இன்று தரிசனம் கிடைத்தது.

---

**நேர்மையான மனம் அமைதியாயிருக்கும்**

—கான்பூஷியஸ்

**பழவினையே காரணம் :**

மனிதவாழ்வில் நடக்கும் நன்மை, தீமைகள் யாவற்றிற்கும் அடிப்படையான காரணத்தையே நம்முடைய பெரியவர்கள் வினை என்று குறிப்பிட்டனர். நெடுநாட்களாகக் குழந்தைப்பேறு இல்லாத அன்பர் ஒருவர் இக்கோயில் திருப்பணியில் ஈடுபட்டுத் திருப்பணிகளை நிறைவேற்றிய பின்னர், அவருக்குக் குழந்தைப் பேறு வாய்த்தது என்று இங்கே அன்பர்கள் குறிப்பிட்டார்கள். சில இடங்களைத் தரிசித்ததால் நோய் நீங்கியது என்றும் பலர் குறிப்பிடக் காண்கிறோம். மேம்போக்காக இச் செயல்கள் ஒரு காரணம்போல் தோன்றினாலும் இவற்றிற்கெல்லாம் அடிப் படைக்காரணம் பழவினையே என்பதை நம்மில் பலர் உணர்வ தில்லை.

**மனம் திருந்த வேண்டும் :**

இன்றைய நாட்டுநடப்பில் சில விஷயங்களை மக்களுக்குச் சொல்லவேண்டுவது அவசியமாகிறது. எல்லாம் தெரிந்தவர்கள் மனித குலத்தில் இல்லை. சுயநலப் போக்குள்ள இன்றைய மனிதர்கள் மனம் திருத்தமுற வேண்டும். நாடு திருந்த வேண்டுமானால் வீடு திருந்த வேண்டும். தனிமனிதன் திருந்தினா லல்லாது நாடு திருந்தாது. இந்தத் திருத்தம், தானே மக்களுக்கு, வந்துவிடும் என்று எதிர்பார்ப்பதில் பயனில்லை. தீமைகளைப் பார்க்காதே! தீமைகளைக் கேட்காதே! தீமைகளைப் பேசாதே! என்பதை விளக்க இங்கு மேடைமீது மூன்று குரங்குப் பொம்மைகளை வைத்திருக்கிறார்கள். இவற்றை எல்லாம் பார்த்தே, தம்மைத் திருத்திக்கொள்வது மேன்மக்களுக்கே இயல்வது. சாதாரண மக்களுக்கும் பக்குவம் வரவேண்டுமானால் நாம் அவர்களைச் சந்தித்து, உண்மைகளை எடுத்துரைத்தல் வேண்டும் முன்னர் வாழ்ந்த பெரியவர்களும், அருளாளர்களும் எப்படித் தங்களை வளர்த்துக் கொண்டார்கள் என்பதற்கு வரலாறுகள் உண்டு. அந்த வரலாறுகளை நாம் மக்களிடையே எடுத்துச்சொல்ல வேண்டுவது இன்றைய நிலையில் தேவைப்

---

மன நிறைவு இல்லாமையே துன்பம்

—லாவோட்ஸே

படுகிறது. இன்றைக்குத் திருத்தம் பெற வேண்டியவர்கள் இளைஞர்களும், கீழ்நிலையில் உள்ளவர்களும் மட்டுந்தான் என்பதில்லை. முதியவர்களு ் மேல் நிலையில் உள்ளவர்களும்கூட திருத்தப்பட வேண்டியவர்களாகவே இருக்கிறார்கள்.

**தகுதியும் பக்குவமும் தேவை :**

ஒரு பெரியவர் தன் மகன் இனிப்புப்பண்டங்களை அதிக விருப்பத்தோடு அடிக்கடி உண்பதை நிறுத்தஎண்ணினார். ஆனால் மகன் கேட்கவில்லை. தான் பெரிதும் மதிக்கும் துறவி ஒருவரிடம் மகனை அழைத்துப்போய் இவன் அடிக்கடி இனிப்பு உண்ணும் பழக்கத்தைக் கைவிட, "ஆசிர்வதிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். துறவியோ, 'ஒருவாரம் கழித்து அழைத்து வருக' என்றார். அடுத்தமுறை வந்தபோது 'பதினைந்து நாட்கள் கழித்து வருக' என்றார், மூன்றாம் முறை வந்தபோதும் இதேபோல் 'ஒரு மாதம் கழித்து அழைத்து வருக' என்றார். அடுத்து வந்தபோது துறவி, அச்சிறுவனிடம் 'இனிப்பை மிகுதியாக உண்பது கூடாது. அது உடலில் பலவகையான நோய்களை உண்டாக்கும். குறைத்து உண்டால் நோய் நீக்கத்துடன் நலமாக வாழலாம்' என்று கூறினார். அன்று முதல் அச்சிறுவனும் இனிப்புப்பண்டம் உண்பதை அறவே நிறுத்திவிட்டான். பின்னர் ஒரு நாள் பெரியவர், துறவியாரிடம் வந்து சிறுவன் இனிப்பு உண்பதை நிறுத்திய செய்தியைக் கூறிவிட்டு, தாங்கள் பலமுறை வரச் சொல்லிய காரணம் என்ன என்று அடக்கத்தோடு வினவினார். துறவியார், 'தாங்கள் வந்தபோது நான் இனிப்பு உண்ணும் பழக்கம் உடையவனாக இருந்தேன். நான் என்னைப் பக்குவப் படுத்திக் கொள்ளாமல் பிறருக்குச் சொல்வது பொருந்தாது; அப்படிச்சொன்னால் கேட்பவர்களும் திருந்தமாட்டார்கள். அதனால்தான், நான் முதலில் என்பழக்கத்தைநிறுத்தி, என்னைத் தகுதியாக்கிக் கொண்ட பின்னரே, சிறுவனுக்கு இனிப்பு உண்பதால் வரும் தீமையை விளக்கிச் சொன்னேன். அவனும் அதைக் கேட்டுத் திருந்தி நடக்கிறான் என்பது மகிழ்ச்சிக்குரியது.

---

குற்றமில்லாத நெஞ்சம் அச்சமற்றது

—மாஸிங்கர்

நல்லவற்றைப் பிறருக்கு எடுத்துச் சொல்பவர்கள், அவ்வாறு சொல்வதைத் தம் வாழ்க்கையில் பின்பற்றி நடக்க வேண்டும். தாம் கடைப்பிடித்தால்தான் தம் கொள்கையை - தம்சொல்லைப் பிறர் மதிப்பார்கள்; கேட்டு நடப்பார்கள். நடைமுறையில் இனிப்பு உண்பதை மேற்கொண்டிருந்த என்னைத் திருத்திக் கொள்ளவே இத்தனை காலம் தேவைப்பட்டது. திருவள்ளுவரும்,

''சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்''

என்று கூறியுள்ளமை இக்கருத்தை வலியுறுத்தல் காணலாம்.

அதைப்போலவே கேட்பவர்களும் பக்குவம் உடையவர்களாக இருக்க வேண்டும். பக்குவம் உடையவரா என்பதைத் தேர்ந்து பார்த்தே நம் கொள்கையைச் சொல்லவேண்டும். நான் தங்களைப் பன்முறை வரச்சொல்லியதைக் கேட்டு, அதன்படி தாங்களும் சிறுவனை அழைத்துக்கொண்டு வந்ததால், 'சொன்னால் சிறுவன் கேட்பான்' என்ற நம்பிக்கை எனக்கும் பிறந்தது, ஆகவேதான் சொல்ல முடிந்தது. சொல்பவருக்கும் சொல்லத் தகுதி வேண்டும். கேட்பவருக்கும் கேட்டு நடக்கும் பக்குவம் வரவேண்டும். நீங்களும் என் அறவுரைகளைக் கேட்கும் ஆர்வமுடையவர்கள்தானா என்பதை அறியப் பலமுறை வரச்செய்தேன். அச்சோதனையில் உங்களுக்கு அறவுரைபெறும் தாகம் இருப்பதை அறிந்தேன்' என்று கூறினார். ஸ்ரீ குருஞானசம்பந்தரும்,

''அன்பு மிகஉண்டாய் அதிலே விவேகம் உண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய் — இன்பம்
தரும் பூரணத்திற்கே தாகமுண்டாய் ஓடி
வரும் காரணர்க்குஉண்மை வை.''

என்று கூறியருள்கிறார். இத்தகைய வேட்கை உடையவர்களே தாம் பெற்ற அறிவுரைகளைப் போற்றிப் பயன் கொள்வர்.

---

பக்தியே நற்சிந்தனைக்கு அடிப்படை

—உபநிஷதம்

**உண்மைச் சைவர்கள் :**

இன்றைய நிலையை இக்கதை நன்கு விளக்கும். அன்பர், நாகலிங்கம் பிள்ளை பலமுறை நம்மை வந்து இங்கே எழுந்தருள அழைத்தமைபற்றிக்குறிப்பிட்டார். இதனால் அவர் பக்குவப் படவில்லை என்பது கருத்தல்ல. சைவர்களாக இருப்பவர்கள் அனைவருமே திருக்கோயில்களில் வழிபாடு நிகழ்த்துபவர் களாகவும், சைவத் திருமடங்களோடு தொடர்புடையவர்களாக வும் இருக்க வேண்டுமென்பதே இதன் கருத்தாகும். பள்ளியிலும் கல்லூரியிலுமாக, முறையாகப் பயிற்சி பெறாதவர்கள் எப்படி பி.ஏ., எம்.ஏ., முதலிய பட்டங்களைப் பெறுதல் கூடும்? அது போல, சைவத்திருமடங்களோடு தொடர்பில்லாத நிலையில் சைவர்களாக விளங்க எப்படி முடியும்? பிறப்பால் சைவர்கள் என்ற நிலையை விடுத்துச் சைவக் கொள்கைகளை அறிந்து கடைப்பிடிப்பதன் மூலம் சைவர்கள் எனப்பெருமை கொள்வதே தக்கதாகும்.

**திருக்கோயில்களும் திருமடங்களும் :**

இம்மை வாழ்வைப் பற்றியே நமது வாழ்க்கை இன்று அமைந்துள்ளது. மறைவுக்குப்பின் நாம் எங்கே போகிறோம். நம் நிலை என்ன? முற்பிறவிக்கும் இப்பிறவிக்கும் தொடர்புண்டா? இப்பிறவிக்கும் அடுத்த பிறவிக்கும் உள்ள தொடர்பு யாது? என்பன போன்ற வினாக்களுக்கு உரிய விடைகளையே நமது சமயமும் – சமயப் பேராசிரியர்களும் தெளிவாக விளக்கி உள்ளார்கள். இவற்றை அறிவிப்பதற்கே கோயில்களும்— மடாலயங்களும் உள்ளன. தன்னைநாடி வருபவர்களுக்கு உறுதிப் பொருள்களைக் கூறவேண்டிய கடமை திருக்கோயில்களுக்கும்- திருமடங்களுக்கும் உண்டு. மனிதர்கள் எல்லோரும் சமமான வர்கள் அல்லர். உயிர் வளர்ச்சிக்கு உரிய படிப்பினை எந்தப் பள்ளியிலும் இன்று கற்றுத்தருவதில்லை. மனம் அடங்கக் கற்கும் கல்வி இன்று வேண்டும். இவற்றை விளக்கவும், அனுபவங்களைக் கூட்டுவிக்கவும் திருக்கோயில்களும் – திருமடங்களும் உள்ளன. இவற்றின் தொடர்பின்றி வாழ்பவர்கள் பிறந்த பிறவியின் பயனையே சிந்திக்காதவர்களாகவே மறைகிறார்கள்.

---

**பேசுவதற்கு முன்பு யோசிப்பது நன்று**

—பாரசீகப்பழமொழி

**அனைவர்க்கும் உரிய கடமை :**

நாம் கோயிலுக்குப் போவதால் - கோயிலுக்குப் பெருமை என்பதில்லை. நமக்கே நலம் விளைகிறது. பள்ளிக்கு மாணவன் தன் வளர்ச்சிக்காகப் போகிறானே அன்றி, பள்ளிக்கூடம் வளர்ச்சி பெற வேண்டுமென்று செல்வதில்லை. நம்மை நாம் திருத்திக் கொள்ளவும், இன்று திருக்கோயில்களிலும், திருமடங்களிலும் இத்தகைய அறிவுரைகளை எடுத்துச் சொல்லத்தக்கவர்கள் இருக்கிறார்களா? என்று கேட்பதில் பயன் இல்லை. நமக்கு விளக்கமின்மையும், சோம்பலுமே இக் குறைபாடுகளுக்குக் காரணம் கோயிலுக்கு அடிக்கடி நாம் சென்று, அங்குள்ள சிவாசாரியர்களைச் சமய நுட்பங்கள்பற்றி வினாவவேண்டும். ஏன் வெள்ளிக்கிழமைகளில் வழிபடுதல் சிறப்பாகக் கருதப்படுகிறது? அதுவும் ஆடி வெள்ளியும் தை வெள்ளியும் பாராட்டப்படுவது எதனால்? என்றெல்லாம் கேட்கத் தொடங்கினால், அவர்களுக்குத் தெரியவில்லை என்றாலும் தக்கவர்களை விசாரித்தாவது சமய நுட்பங்களை அவர்கள் தெரிந்து வைத்துக்கொள்வதோடு மற்றவர் களுக்கும் விளக்கிச் சொல்வார்கள். எனவே, கோயில் மடங்களில் இருப்பவர்கள் ஒன்றும் தெரியாதவர்கள் என்று சொல்வதில் நமக்கு இருக்கும் உரிமையைவிட, அவர்களைத் தெரிந்தவர்களாக மாற்றுவதில் நமக்குப் பெரும் பங்கு உண்டு என்ற எண்ணம் பக்தர்களுக்கு வரவேண்டும். நாம் அடிக்கடி அறநிலையங்களோடு தொடர்பு கொள்ளவேண்டும். இது சைவர்களாக இருப்பவர்கள் அனைவருக்கும் உரிய கடமை ஆகும். பக்தர்கள் கோயிலுக்கு வருகிறார்கள் என்றால்தான் கோயில் நிர்வாகிகளும். அர்ச்சகர் களும் கோயிலைத் தூய்மையோடும், அருள் விளக்கத்தோடும் பேணுவார்கள். ஒருவரும் வரவில்லையென்றால், யாரும் தம்மைக் கேட்கமாட்டார்கள் என்ற நினைப்பில் அவர்களும் அலட்சியமாக இருப்பார்கள். கிணற்றைப் பாழுங்கிணறு என்று கூறுவது அறியாமை. நாம் நாள்தோறும் அதனைப் பயன்படுத்தி இருந்தால் அதுவும் நன்னீர்க் கிணறாக விளங்கும். நமக்கும் நீர் கிடைக்கும்.

---

பேச்சை விட மௌனம் பெரியதாகும்

—கார்லைல்

அறநிலையங்களின் வளர்ச்சியும். சிறப்பும் மக்களின் தொடர்பால்தான் சிறப்படைய முடியும் என்பதை அனைவரும் உணர வேண்டும்.

**இறைவனின் எளிவந்த கருணை :**

சிறுவர்களின் குணமே பெரியவர்களிடமும் படிந்துள்ளது. சிறுவர்களிடம் ஒன்றைக் கடுமையாகச் சொல்லிக் கட்டளையிட்டால் அதைச் செய்ய அவர்கள் இணங்கமாட்டார்கள். ஆனால் இதமாகச் சொன்னால் கேட்டு நடப்பார்கள். தற்காலத்தில் பெரியவர்களும் பெரும்பாலும் அப்படியே இருக்கிறார்கள். செய்ய வேண்டியது நம் கடமை என்று எண்ணுவதில்லை. மனம் பக்குவம் உடையவர்களாய்ச் செயல்பட்டால்; நாட்டின் நிலை உயரும்; சமுதாயம் வளர்ச்சிபெறும். நாம் இங்கே எழுந்தருளியது பற்றிக் குறிப்பிட்டீர்கள். யாரும் எங்கும் ,போகலாம். நாம் வழிபடும் கூடற்பெருமானே எளிவந்த கருணையுள்ளம் கொண்டவனாய், தாயின்றி வருந்திய பன்றிக்குட்டிகளுக்கு அவற்றின்தாய்ப் பன்றியாகச் சென்று பால் கொடுத்து அருள் செய்தான். தன்பால் பக்தி உள்ளம் கொண்டுள்ள வந்தியம்மையின் துயர் துடைக்கக் கூலியாளாய்ச் சென்றான். அதுபோல நாமும் இங்கே வருவதால் பயன் விளைவதாக இருக்கவேண்டும். சிலருக்காவது பயன் விளைய முடியுமென்றால் வருவதில் மகிழ்ச்சி அடைவோம்.

**முன்பு செய்தவத்தின் பயன் :**

நாவரசரும், மணிவாசகரும் நமது குருமுதல்வராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தப் பெருமானும் போன்ற அருளாளர்கள் நாம் கடைத்தேற எவ்வளவோ அறவுரைகளை விளக்கியுள்ளனர். அவற்றை முதலில் நாம் உணர்வதில்லை. அவை அனுபவத்திற்கு வரும்போது பாராட்டுகிறோம். பெரியவர்கள் அனுபவத்தைஒட்டி நாமும் முன்னேறவேண்டும். சொன்னதைச் சொன்னபடி நடைமுறைப்படுத்தி வாழ நாம் பழகிக்கொள்ள வேண்டும். தாம் சொல்லியவற்றை முழுவதும் நிறைவேற்ற எல்லோராலும் இயலாது என்றாலும் இயன்ற அளவு சொல்லியவண்ணம்

---

**தன்னை வெல்பவனே இன்பம் அடைவான்**

—மகாவீரர்

நிறைவேற்ற நடைமுறையில் பழகிக்கொள்ள வேண்டும். நாம் தொடங்கும்போது எடுத்துரைத்த அபிராமி அந்தாதிப் பாடலை நன்கு கவனித்தால் ஓர் உண்மை புலப்படும். இம்மையில் யானை, குதிரை, தேர் முதலிய அரச சின்னங்களோடு ஒருவன் வாழ்கின்றான் என்றால் அவன் முற்பிறப்பில் இறைவனடியில் செலுத்திய பக்திமையும் செய்த தவமுமே அதற்கு அடிப்படை என்பது விளங்குகிறது. நாட்டில் இல்லாதவர் பலராகவும் செல்வந்தர்கள் சிலராகவும் இருப்பதைக் காண்கின்றோம். இதற்குக் காரணம் முன்னைத் தவத்தின் பயன் என்பதை உணர வேண்டும். முற்பிறவியில் நல் வினைக்குக் காரணமாகிய தானம், தவம் முதலிய புண்ணியம் செய்தவர்கள் இம்மையில் வளம் பல பெற்று வாழ்வதோடு மறுமையிலும் இறைவனின் திருவடிப் பேற்றுக்குரியவர்கள் ஆகின்றார்கள். முற்பிறவியில் தானம், தவம் முதலிய புண்ணியச் செயல்களில் ஈடுபடாதவர்கள் நோய்களாலும் வறுமையாலும் துன்புறுகின்றார்கள். இதனையே திருவள்ளுவரும்,

''இலர் பலராகிய காரணம் நோற்பார்
சிலர் பலர்நோலா தவர்''

என்று கூறுவதைக் காணலாம்.

இறைவன் ஆட்சி அறஆட்சி! அங்கே அநீதி என்ற பேச்சே இல்லை. நன்மை செய்தவர்களுக்கு அவன் நன்மையையே தந்து வளர்க்கிறான்! தீயவர்க்குத் தீமையையே தந்து திருத்துகிறான்! இந்த அற உணர்வினை நாடு பெற்றுத் திருந்த வேண்டுமானால் மக்களை நெறிப்படுத்த வேண்டுமானால் — இவர்களை ஈன்றெடுத்த மாதா - பிதாக்களும், உணர்த்தும் குருநாதனும் சரியாகக் கடமையினைச் செய்து காட்டித் தம்மைச்

---

தீமையை நினையாதவன் இன்பமுறுகின்றான்

—விஷ்ணுபுராணம்

சார்ந்தவர்களைத் திருத்தவேண்டும். இளமை முதலே அறநெறிகள் புகட்டப் பட்டாலொழிய வருங்காலச் சந்ததிகளாவது திருத்தமுறுவார்களா என்பது சந்தேகமாகவே இருக்கும்.

**துறவியின் தியாகம் :**

வலம்புரம், காவிரித் தென்கரைத் தலங்களுள் ஒன்று. பாடல்பெற்ற இத்தலத்திற்கு வழிபாட்டிற்கு வரவேண்டும் என நினைத்தோம். வலம்புரம் பற்றிய புராண வரலாறு தியாக உணர்வை ஊட்டத்தக்கது. ஒருமுறை பெருக்கெடுத்து வந்த காவிரி கும்பகோணத்திற்கு அண்மையில் உள்ள திருவலஞ்சுழியில் வரும்போது, வலமாகச் சுழித்தோடி பாதாளத்துள் புகுந்து விட்டது. காவிரியின் வளத்தைப் பெறமுடியாத மக்கள் இறைவனை வேண்டிக் குறையிரந்தனர். அரச முடியோ அன்றி ஓர் துறவி ஜடா முடியோ பலியிடப்பெற்றால் காவிரி மீண்டும் வெளிவந்து பாயும் என ஓர் அசரீரி தோன்றியது. நாடு காக்கும் மன்னன் பலியிடப் பெறுவதைவிட நாமே நம்மைப் பலியிட்டுக் கொள்ளலாம் என்று கருதிய ஏரண்ட முனிவர் தம்மையே பலியிட்டார். காவிரி மீண்டும் வெளிவந்து பாய்ந்தோடியது. வலஞ்சுழியில் தம்மைப் பலியிட்டுக்கொண்ட ஏரண்ட முனிவர் வலம்புரத்தில் வந்து எழுந்தருளினார். தன்னலங் கருதாது மக்கள் வாழ்விற்காகத் தம்மையே தியாகவுணர்வுடன் அர்ப்பணித்த ஏரண்ட முனிவரின் திருவுருவம் இன்றும் இக்கோயிலில் இருக்கிறது. இத்தகைய பாடல்பெற்ற திருத்தலமாகிய வலம்புரத்துக்கு எழுந்தருளக் கருதிய நம்மை இவ்வூர் அன்பர்கள் அழைத்தனர். மேலப்பெரும்பள்ளம் என வழங்கும் திருவலம்புரத் தரிசனம் கிடைத்தது.

---

துறப்பது தான் இன்பத்தின் இரகசியம்

—கார்னீகி

**அருள்நெறி வாழ்க்கைக்குக் கால்கோள் :**

கீழப்பெரும்பள்ளத்து மக்கள் தங்கள் ஊரில் தனியே ஒரு சிவாலயம் இல்லாத குறையை உணர்ந்து ஓர் ஆலயம் எழுப்பி உள்ளனர். கோயிலில்லாத ஊரில் குடியிருக்க வேண்டா என்பது பழமொழி. இதனை உணர்ந்த இவ்வூர் மக்கள் இங்கே ஓர் அழகிய கோயிலை நிர்மாணித்துக் குடமுழுக்கும் செய்வித்து அதன் மண்டலாபிஷேக நிறைவிற்கு நம்மை அழைத்த போது நாமும் மகிழ்வுடன் வழிபாட்டிற்கு வந்தோம். இங்கு நாம் வருவதற்கு முன்பே – ஓராண்டிற்கு முன்பே நமது ஆதி பரமாசாரியர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் பெயரால் வார வழிபாட்டுக் கழகம் அமைத்து அதன் மூலம் அருள்நெறிப் போதனைகளும் வாரவழிபாடுகளும் நடத்தி வருவது மகிழ்ச்சி தருகிறது. கும்பாபிடேக விழாவில் ஏதேனும் குற்றங்குறைகள் நேர்ந்திருப்பினும், அதனை நிவர்த்தி செய்து கொள்வதற்காகவே இவ்வாறு மண்டலாபிஷேகத்தை நடத்துகிறோம். இன்று இங்கே நீங்கள் குழுமியுள்ளது போல் தினமும் வந்து வழிபடவேண்டும். மக்கள் வந்தால்தான் கோயில்களுக்குச் சத்தி. ‘குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்’ என்பது நம் நாட்டுப் பழமொழி. பரிந்து மகிழ்ந்து வரஅழைத்தால் இறைவன் வருவான் என்பது நமது முன்னோர் வாக்கு. எனவே கோயில்கட்டியாயிற்று; கும்பாபிடேகம் முடிந்தது; மண்டலாபிஷேகமும் நடந்தேறியது; இனிக் கோயில் பக்கம் வேலை இல்லை என்று கருதாது ‘இவை அருள்நெறி வாழ்க்கைக்குக் கால்கோள், தொடக்கவிழா’ என்று கருதி நாளும் வந்து வழிபட்டு, இம்மை மறுமைப் பயன் பெற வேண்டுமென்று வாழ்த்தி, இத்திருப்பணியில் ஈடுபட்ட அன்பர்களுக்கும், பக்தர்களுக்கும் எல்லா நலன்களும் பெருகச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

நன்றி— ‘திருவருட் செய்தி’

---

**கெட்டபிள்ளைகளால் குடும்பங்களுக்கு முடிவு**

—பஞ்சதந்திரம்

தலவரலாறு

## திருப்பெரும்புலியூர்

இத்தலம் காவிரி வடகரையில் 53-வது தலமாகும். வியாக்கிரபாத முனிவரால் பூசிக்கப்பட்டதால் திருப்பெரும் புலியூர் என்ற பெயர் பெற்றது. (வியாக்கிரம்–புலி) திருவை யாற்றுக்கு வடமேற்கே சுமார் 4 கிலோமீட்டர் தொலைவில் உள்ள இத்தலத்தை, திருவையாற்றிலிருந்து கல்லணை செல் லும் பேருந்து வழியில் திருவையாற்றுக்கு மேற்கே 2 கிலோ மீட்டர் சென்று அங்கிருந்து வடக்கே செல்லும் சாலையில் 2 கிலோமீட்டர் நடந்துவந்தால் அடையலாம். இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் மட்டும் ஒரு பதிகம் பாடியுள்ளார்.

இறைவர் பெயர் :– வியாக்ரபுரீசுவரர்; இறைவியார் பெயர்:– சௌந்தரநாயகி; தீர்த்தம்:- கொள்ளிடநதி: தலவிருட்சம்:- வில்வமரம்.

---

## பதிகப் பெருவழி—53

### திருப்பெரும்புலியூர்

திருப்பதிக வரலாறு

திருஞானசம்பந்தப் பெருமான் திருவையாற்றெம்பெரு மானைத் தரிசித்துப் பதிகங்கள் பாடிப் பணிந்தெழுந்து புறத்தே போந்தருளி திருத்தொண்டர்களுடனே அத்திருத்தலத்தில் எழுந் தருளியிருந்தவாறே திருப்பெரும் புலியூர் முதலான பதிகளுக்குச் சென்று வணங்கி மீண்டும் திருவையாற்றுக்கு வந்து பெருத்த ஆர்வத்துடன் அங்கே தங்கியிருந்தார் என்று பெரியபுராணங் கூறுகிறது. திருப்பெரும்புலியூரில் பெருமானைத் தரிசித்துப் பேரானந்தத்துடன் பாடியருளிய அருமைத் திருப்பதிகம் இது.

**பண்—கௌந்தாரம்**

திருச்சிற்றம்பலம்

மண்ணுமோர் பாகம் உடையார் மாலுமோர் பாகம் உடையார்
விண்ணுமோர் பாகம் உடையார் வேதம் உடைய விமலர்
கண்ணுமோர் பாகம் உடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாகம் உடையார் பெரும்புலியூர்பிரியாரே.1

---

பிள்ளையைப் பிடிக்காத தாயே பெரும் பகை ஆவாள்
—கௌடில்யர்

மண்ணாகிய நிலத்தைத் தமது ஒருபாகத்தில் உடையவரும், திருமாலை ஒருபாகத்தில் உடையவரும், ஆகாயத்தை ஒரு பாகமாக உடையவரும் வேதங்களைத் தமக்கு உரிமையாகக் கொண்டவரும், கண்ணும் ஓர் பாகம் உடையவரும், கங்கையாற்றினைச் சடை முடியில் ஒளித்தவரும், உமாதேவியாரை ஒரு பாகத்தில் உடையவருமாகிய சிவபெருமான் திருப்பெரும்புலியூர் என்ற இந் தலத்தை விட்டு என்றும் பிரியாது எழுந்தருளியிருப்பார்.

துன்னு கடற்ப வளஞ்சேர் தூயன நீண்டதிண் டோள்கள்
மின்னு சுடர்க்கொடி போலும் மேனியி னாளொரு கங்கைக்
கன்னிக ளின்புனை யோடு கலைமதி மாலை கலந்த
பின்னு சடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 2

கடலிலே நெருக்கமாக விளைகின்ற பவளத்தை ஒத்த தூயனவும் நீண்டு திண்மையுடையனவையுமான தோள்களும், மின்னுகின்ற சுடர்க்கொடி போலும் மேனியளாகிற ஒப்பற்ற கங்கை, கன்னியாகிய உமா தேவியார் ஆகியோர்களின் பொலிவும், கலைமதியாகிய தலைமாலை கலந்த சடையும் விளங்கும் சிவபெருமான் திருப்பெரும்புலியூர் என்னுமித்தலத்தை விட்டு என்றும் பிரியார்.

கள்ள மதித்த கபாலங் கைதனி லேமிக ஏந்தித்
துள்ள மிதித்து நின் றாடுந் தொழிலர் எழில்மிகு செல்வர்
வெள்ள நகுதலைமாலை விரிசடை மேல்மிளிர் கின்ற
பிள்ளை மதிப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 3

கள்ளத்தைக் கருதிய பிரமதேவரது கபாலத்தைக் கையிலேந்தி (முயலகன்) துள்ளும்படி அவனை மிதித்து நின்று நடனமாடும் தொழிலையுடையவரும், அழகு மிக்க செல்வரும், பெருக்கெடுத்தோடும் கங்கைநதி நகுதலைமாலை இவைகளுடன் விரிந்த சடைமேல் இளம்பிறையும் மிளிர்தலையுடையவருமான சிவபிரானார் திருப்பெரும்புலியூரை விட்டு என்றும் பிரியார்.

---

தேசங்களுக்கு மலிவான பாதுகாப்பு கல்வியே

—எட்மண்ட்பர்க்

ஆட லிலையம் உடையார் அருமறை தாங்கி ஆறங்கம்
பாட லிலையம் உடையார் பன்மை யொருமைசெய் தஞ்சும்
ஊட லிலையம் உடையார் யோகெனும் பேரொளி தாங்கிப்
பீட லிலையம் உடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 4

பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்றனையும் தழுவிய திருக்கூத்தினை உடையவர். அரியமறைகளும் ஆறு அங்கங்களும் தாங்கி நிற்க அவைபாடும் பாடலில் மறைந்து நிற்பவர். பன்மை ஒருமைகளைத் தோற்றுவித்து ஐம்பொறிகளும் ஊடுதலினால் மெய்ப்பொருளாகிய கடவுள் நிச்சயமின்றி ஐயப்படுதற்கு உரியவர். யோகமாகிய பேரொளி கொண்டு பெருமையுடைய நள்ளிரவில் யாவற்றையும் தமது பேரொளியில் ஒடுங்கச் செய்பவர். இத்தகைய சிவபிரானார் திருப்பெரும்புலியூர் என்னுமித்தலத்தை விட்டு என்றும் பிரியார்.

தோடுடை யார்குழைக் காதிற் சுடுபொடி யாரன லாடக்
காடுடை யாரெரி வீசுங் கையுடை யார்கடல் சூழ்ந்த
நாடுடை யார்பொரு ளின்ப நல்லவை நாளு நயந்த
பீடுடை யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 5

ஒரு காதில் குழையும் ஒரு காதில் தோடும் உடையவர்; சுட்ட வெண்பொடியாகிய திருநீறு பூசியவர்; ஆடுதற்குத் தீ எரிதலால் அனல் வீசும் காட்டினையுடையவர்; எரிதலையுடைய தீயை ஏந்திய திருக்கரத்தினையுடையவர்; கடல் சூழ்ந்த நாடெல்லாம் தமது உடமையாக உடையவர்; அறம் பொருள் இன்பம் வீடு எனப்படும் நன்மை பயக்கும் புருஷார்த்தங்களை நாள்தோறும் அடியார்கட்கு அருள்வதில் பெருவிருப்புடைய பெருமையுடையவர்; இத்தகையதலைவராகிய சிவபிரானார் திருப்பெரும்புலியூரை விட்டு என்றும் பிரியார்,

கற்ற துறப்பணி செய்து காண்டுமென் பாரவர் தங்கள்
முற்றி தறிதுமென் பார்கள் முதலியர் வேதபு ராணர்
மற்றி தறிதுமென் பார்கள் மனத்திடை யார்பணி செய்யப்
பெற்றி பெரிதும் உகப்பார் பெரும்புலி யூர்பிரி யாரே. 6

---

கடவுளும் குருவும் ஒருவரே

—கபீர்தாசர்

கற்கத் தக்கவையான மெய்ந்நூல்களைக் கற்று அவை விதித்த முறையில் சரியை கிரியையாதி திருத்தொண்டு செய்து இறைவனைக் காண்போம் என்பவரிடத்தும் திருத்தொண்டு முற்றுப்பெற்று யோகநிலையினால் இறைவனைக் கூடுவோம் என்பாரிடத்தும் முதற் பொருளாய் விளங்குபவரும் வேதம் புராணம் போன்ற எல்லாக் கலைகளுமாயிருப்பவரும் போகத்தையும் கடந்த ஞான நெறியினாலே மெய்ப்பொருளை அறிவோம் என்பவர்களின் இதயத்தாமரையில் இன்பநடம் புரிபவரும், தொண்டர்களின் பணி செய்யும் ஆர்வமாகிய தன்மையினைப் பெரிதும் மகிழ்பவருமாகிய சிவபிரானார் திருப்பெரும்புலியூரைப் பிரியார்.

**மறையுடை யாரொலி மாமலர்ச் சேவடி சேர்வார்**
**குறையுடை யார்குறை தீர்ப்பார் குழகர் அழகர்நஞ் செல்வர்**
**கறையுடை யார்திகழ் கண்டங் கங்கை சடையிற் கரந்தார்**
**பிறையுடை யார்சென்னி தன்மேற் பெரும்புலி யூர்பிரி**
**யாரே.** 7

வேதங்களைத் தமக்கு உடைமைப்பொருளாகக் கொண்டவரும், ஒலிக்கின்ற பாடல்களாலே தமது அழகிய மலர்போலும் சிவந்த திருவடிகளை இடைவிடாது தியானிப்பவர்களும் மனக்குறை உடையவர்களுமாகிய அடியார்களது குறைகளைப் போக்குபவரும், குழகரும், அழகரும், நமக்கு உரிமையுடைய செல்வரும், கழுத்திலே திகழும் விஷத்தின் கறையை உடையவரும், கங்கையைச் சடையிலே ஒளித்தவரும், தலையின்மீது பிறைச்சந்திரனைத் தரித்தவருமாகிய சிவபெருமான் திருப்பெரும்புலியூரைப் பிரியார்.

**உறவியும் இன்புறுசீரும் ஓங்குதல் வீடெளி தாகித்**
**துறவியுங் கூட்டமுங் காட்டித் துன்பமும் இன்பமும்தோற்றி**
**யறவியென் சிந்தனை மாற்றி வாழவல் லார்தமக் கென்றும்**
**பிறவி யறுக்கும் பிரானார் பெரும்புலி யூர்பிரி யாரே.** 8

---

ஆயிரம் தந்தையர் ஒரு தாய்க்குச் சமம்

—மனு

இறைவனாகிய பதிக்கும் ஆன்மாவாகிய பசுவுக்கும் உள்ள உறவும், அவ்வுறவினையறிந்து வாழும் இன்பமளிக்கும் சீரான வாழ்வு ஓங்குதலும், பின்னர் விவேகம் உண்டாக உலக வாழ்வில் பற்றறுத்தல் எளிதாகி, இறைவன் திருவடிகளை மறத்தல் என்ற எண்ணமே ஒரு சிறிதும் வராது தவிர்த்து அதாவது மறத்தலில்லாது திருவடிகளை என்றும் தியானித்து இத்தகைய பற்றற்ற தன்மையில் நிலைத்து வாழ வல்லார்க்கு பந்தம் மோக்ஷம் என்ற இரண்டின் தன்மையையும் அறியச் செய்து பந்தத்தால் ஏற்படும் துன்பத்தையும் துறத்தலில் ஏற்படும் இன்பத்தையும் உணரச் செய்து, அவர்களுக்குப் பிறத்தல் என்பது ஒரு நாளும் இல்லாமற் செய்யும் சிவபிரானார் திருப்பெரும்புலியூர் பிரியார்.

சீருடை யாரடி யார்கள் சேடரொப் பார்சடை சேரும்
நீருடை யார்பொடிப்பூசுநினைப்புடை யார்விரி கொன்றைத்
தாருடை யார்விடை யூர்வார் தலைவரைந் நூற்றுப்பத்தாய
பேருடைய யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 9

எல்லாப் பெருமைகட்கும் தாமே உறைவிடமானவரும், தம்முடைய அடியார்கட்குத் தோழனை நிகர்த்தவரும், திருச்சடையிலே வந்துவிழுந்த கங்கை நீரையுடையவரும், திருநீறு பூசுதலை என்றும் நினைத்திருப்பவரும் (அதாவது மறவாதுஎன்றும் பூசுபவரும்) விரிந்த கொன்றைப் பூமாலையை உடையவரும், எருதினை வாகனமாகக் கொண்டவரும், எல்லா உலகுக்கும் எல்லா உயிர்க்கும் தலைவரும் அழகிய ஆயிரக்கணக்கான திருப்பெயர்களை உடையவரும், பெருமானுமாகிய சிவபிரான் திருப்பெரும்புலியூர் என்னுமித்தலத்தைப் பிரியார்.

உரிமை யுடையடி யார்கள் உள்ளுற வுள்கவல் லார்கட்
கருமை யுடையன காட்டி அருள்செயும் ஆதி முதல்வர்
கருமை யுடைநெடு மாலுங் கடிமல ரண்ணலுங் காணாப்
பெருமை யுடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரியாரே 10.

---

உழைக்காமல் உண்பவர்கள் திருடர்கள்

—காந்திஅடிகள்

உள்ளூற உள்கவல்லார்களாகிய உரிமையுடைய அடியார் கட்குக் காண்டற்கருமையான பாசத்தின் இயல்பைக் காட்டி, அது கழலுமாறு அருள் செய்யும் ஆதிமுதல்வரும், கருநிறமான மேனியுடைய திருமாலும் மணம் மிக்க தாமரையில் உறையும் பிரம்மதேவனும் காணாத தீப்பிழம்பாகிய பெருமையுடையவரும் பெருமானுமாகிய சிவபிரானார் திருப்பெரும்புலியூர் என்னுமித் தலத்தைப் பிரியார்.

பிறைவள ரும்முடிச் சென்னிப் பெரும்புலி யூர்ப்பெரு மானை
நறைவள ரும்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள ருந்தமிழ் மாலை வல்லவர் தந்துயர் நீங்கி
நிறைவளர் நெஞ்சின ராகி நீடுல கத்திருப் பாரே. 11

வளர்தலையுடைய பிறைச் சந்திரனைத் தலையில் உடையவரும் திருப்பெரும்புலியூரில் பிரியாது எழுந்தருளி யிருப்பவருமான சிவபெருமானைத் தேன் பலிக்கின்ற சோலை களையுடைய சீகாழிப்பதியில் அவதரித்து நற்றமிழை உலகிற்கு அளிக்கும் திருஞானசம்பந்தன் துதித்து பாடியதும், வேதத்தின் உட்பொருள் வளர்ந்து கொண்டிருப்பதுமான இத்தமிழ் மாலையை ஓதவல்லார்கள் தங்களது துயர்களெல்லாம் நீங்கி நிறை வளர் நெஞ்சினராம் இவ்வுலகத்தில் நீடுழிவாழ்வார்கள்.

---

**பொறுமை**

எவருக்கும் பொறுமையே நல்ல அணியாகும். பயனுடயதும் ஆகும். வலிமை இல்லாதவனுக்கு வேறுவழி இல்லை.

வலிமை, தூய்மை, இவை உடையவன் பொறுத்திருந்தால், அவனை அறியாதார் 'கோழை' என்று இகழலாம். அதனால் தீமை இல்லை. காலத்தில் பெருமை தெரியும். கூளம் குப்பை இல்லாத இடத்தில் விழுந்து தீ அவிந்துதானே போகும்-

ஆகவே, அசாதாரணமான ஒருவன் தன்னை நிந்தனை செய்யும்போது, ஓர் அறிஞன் அது தனக்கு நன்மை எனத் தேர் வான். நிந்தனை செய்பவனிடம் அறிஞனின் குறையும் போய்ச் சேரும். இவ்வழியில் கேடு செய்ய நினைத்தவனை ஒரு நல்ல அறிஞன் வாழ்த்தவும் கூடும். —**விதுரநீதி**

---

**கையால் வேலை செய்து பிழைப்பவன் கடவுள் நெறியில் வாழ்பவன்** —மூஸானாவார்

## சித்திரை மாத அடியவர் வழிபாடு

(வெகுதான்ய வருடம்)

### தில்லை வாழந்தணர் (14—4—98)

''தில்லை வாழ்ந்தணர்தம் அடியார்க்கு மடியேன்'' திருத்தொண்டத் தொகையருளிய சுந்தரர் வாக்கு. இவ்வாக்கிற்கு அடி எடுத்துக் கொடுத்தவர் சிவபெருமான். பெருமானாலேயே நினைவுபடுத்தப்பட்ட பெருமைக் குரியவர் 'தில்லை வாழ்ந்தணர்' தில்லை நடராசப்பெருமானுக்குத் தொண்டு செய்வதன்றி வேறு எப்பணிக்கும் தம்மை ஆட்படுத்தாத தில்லை வாழ்ந்தணரை, இவ்வெகு தான்ய, சித்திரைத் திங்கள் விசாக நன்னாளில் சிந்தித்து உயர்வு பெறவேண்டுவோம்.

### திருநாவுக்கரசு நாயனார் (22—4—98)

'அப்பரே' என ஞானசம்பந்தப் பெருமானால் அழைக்கப்பட்ட திருநாவுக்கரசு நாயனாரைச் சிந்தித்தாலே எல்லா நலன்களும் பெறலாம். உயர்வு பெற்றவர்களில் ஒருவர் திங்களூரில் வாழ்ந்த அப்பூதியடிகள் என்ற மறையவர். பல்லவ மன்னன் தனது அறியாமை நீங்கி, நாவுக்கரசரைப் போற்றியதால் சைவநெறியைப் பின்பற்றி உய்திபெற்றான். 'உழவாரத் தொண்டும் சிவபெருமானைப் பரவுதலுமாக நின்றவர். பல ஆயிரக்கணக்கான பாடல் பாடியிருந்தும், நமக்குப் பயன்படும் வகையில் 313 பதிகங்களைக் கொண்ட 3044 பாடல்களே அப்பர்சுவாமி பாடியவை நமக்குக் கிடைத்துள்ளன. அன்றாட வாழ்க்கையில் உடல் நோய் நீங்க, மனநோய் நீங்க, நச்சுப்பொருள்கள் நீங்க, எல்லா விதப்பிணிகளும் நீங்க, உயிர் உய்தி பெற திருநாவுக்கரசு நாயனார், பாட்டுககளை. உள்ளன்புடன் மனமுருகி, சிவபெருமானை சிந்தித்து பாடுபவர்கள் எல்லா நலன்களும் பெறலாம் என்பதை நமது முன்னோர்கள் அனுபவ வாயிலாகச் சுட்டிக் காட்டியுள்ளனர். அதைப் பின்பற்றுபவர் பயன் பெறுவர்.

திருநாவுக்கரசு நாயனார் குருபூசைநாள் சித்திரைத் திங்கள் 'சதயம்' நன்னாள். (கி.பி. 655 சித்திரை சதயம் நன்னாளில் அப்பர் சுவாமிகள் முத்திப்பேறு பெற்றதாக, கா.சு. பிள்ளை ஆய்வில் குறிப்பிட்டுள்ளார்கள்)

---

**ஓய்ந்திருந்தால், துரோகமும், தற்கொலையுமாகும்**

**—மாஜினி**

## சிறுத்தொண்ட நாயனார் (27—4—98)

'மகவறிந்து ஊட்ட வல்லேனல்லேன்' என்று மிகப்பெரிய அளவில் சிவனடியாரிடத்தும்சிவனிடத்தும் காட்டிய அன்பும் பாராட்டுதலையும் பெற்றவர் சிறுத்தொண்ட நாயனார். சிவனாரிடத்து இத்தகைய பேரன்பைக் காட்டும் மன நிலையை வளர்த்தவர் உயர்வு பெறுவர். ஞானசம்பந்தப் பெருமானால் பெருமைப் படுத்தப்பட்டவர். போர்த் தொழில் தாம் கற்றிருந்தும், பண்பட்ட உயர்ந்த மன நிலையை வளர்த்து சிவபெருமானின் பேரன்பிற்குப் பாத்திரமானவர்.

சிறுத்தொண்ட நாயனார் குருபூசை நாள் சித்திரைத் திங்கள் 'பரணி' நன்னாள்.

## மங்கையர்க்கரசியார் நாயனார் (29—4—98)

'மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்' மன்னன் சமணசமயத்தைத் தழுவியவன். மக்களும் அவ்வாறே. சைவநெறி பாரம்பரியமாகவுடைய சோழமன்னன் மகள் பாண்டிமாதேவியாக பாண்டிய மன்னன் மனைவியாக வந்தார். தாம் நெறி தவறாது நடந்து மதுரை சோமசுந்தரப் பெருமானிடம். இந்நிலை மாறவேண்டுதல் செய்து கொண்டார். இறைவனது திருவருளினாலே, ஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு வந்தார். சமணர்களின் விருப்பப்படி அவர்களுடன், அனல் புனல் வாதங்களில் வென்றார். மன்னனுக்கு ஏற்பட்ட வெப்பு நோயை, சோமசுந்தரப் பெருமானின் 'திருநீற்றினால்' போக்கியருளினார். மங்கையர்க்கரசியாரின் சிவத்தொண்டினை ஞானசம்பந்த நாயனார் பெரிதும் பாராட்டி திருநீற்றின் பெருமையையும், உலகறியச் செய்தார். திருநீற்றின் பெருமையையும், சைவ நெறியின் உயர்வையும், உணர்ந்து, மங்கையர் பின்பற்றினால், வாழ்வில் அவலம் இல்லை.

மங்கையர்க்கரசியாரின் குருபூசை நாள் சித்திரைத்திங்கள் ரோகிணி நன்னாள்.

## விறன்மிண்ட நாயனார் (30—4—98)

'இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் என சிவபெருமானை எப்பொழுதும் நினைந்து கொண்டிருப்பவர். சிவனடியார்கள் அத்தகையோரை என்றும் வணங்கவேண்டும் என்ற கொள்கையை நிலை நிறுத்தியவர் விறன்மிண்ட நாயனார்

---

**தெய்வ நம்பிக்கைக்கு அடுத்தது உழைப்பில் நம்பிக்கை**

—போவீ

திருவாரூர் தேவாசிரிய மண்டபத்திலிருந்த விறன் மிண்டரை வணங்க சுந்தரமூர்த்த நாயனாருக்கு அறிவுறுத்திய திருவாரூர்ப் பெருமான் திருத்தொண்டத் தொகை பாடச் செய்தார்.

விறன்மிண்ட நாயனார் குருபூசை நாள் சித்திரைத்திங்கள் திருவாதிரை நன்னாள்.

## இசை ஞானியார் (9—5—98)

இன்றைய தமிழ் நாட்டில் பிறந்து சிவபெருமானின் தோழனாகி சிவத்தொண்டுகள் பலபுரிந்து, சிவபெருமானின் குறிப்பின்படி மீண்டும் கைலாயம் சென்ற 'சுந்தரமூர்த்தி நாயனாரை'ப் பெற்ற தாயார் என்ற பெருமை மிக்கவர் 'இசை ஞானியார்'

இசை ஞானியார் குருபூசை நாள் சித்திரைத் திங்கள் 'சித்திரை' நன்னாள். இந்நன்னாளில் இசைஞானியார் எழுந்தருளி வரும் திருக்கோலத்தையும் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரரின் சப்தாவரணத் திருக்கோலத்தையுங் கண்டு வழிபடுபவர் மேன்மை பெறுவர்.

## திருக்குறிப்புத் தொண்டர் (10—5—98)

சித்திரைத் திங்களில் நினைவு கூறும் அடியவர்களில் அடியார்க்கடியனாகத் தொண்டு புரிந்தவர் காஞ்சியிலே, சிவனடியார்க்குச் சலவை செய்து கொடுத்த ஏகாலியர் குலப் பெருந்தகை திருக்குறிப்புத் தொண்டர் சைவ நெறியைப் பின்பற்றுபவர், யாவரும் ஓர் குலம் என்ற பேருண்மையை நிலைநாட்ட ஒரு சான்று இவரது பெருமை. அன்னாரது குருபூசை நாள் சித்திரைத் திங்கள் 'சுவாதி' நன்னாள்.

சந்தானாச்சாரியார் உமாபதி சிவம் குருபூசை நன்னாள் சித்திரைத் திங்கள் 'அஸ்தம்' நன்னாள் 8-5-98.

இந்த நாயன்மார்களின் குருபூசை நாட்களில் மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்தினர் அ/மி மீனாக்ஷிசுந்தரேசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாயனாருக்கு காலையில் வழிபாடு செய்து மாலையில் திருத்தொண்டர் புராண சிந்தனை மேற்கொள்வர்.

—C.S. சொக்கலிங்கம்

---

முயற்சியே இறைவனிடம் அழைத்துச் செல்லும்

—பாகவதம்

## திருமுறைகளில் சமுதாய நோக்கு

ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான் எம்.ஏ., எம்ஃபில்., பி.எச்.டி

கிழக்குத் திசையிலுள்ள மக்களாக இருந்தாலும், தென் திசையிலுள்ள மக்களாக இருந்தாலும், மேற்கு, வடக்கு திசை மக்களாக இருந்தாலும், அவர்கள் வணங்குபவர்களாக அல்லது வணங்காதவர்களாக இருந்தாலும், இறைவனைப் பற்றிப் பேசுபவர்களாக அன்றிப் பேசாமல் காலங்கழித்தவர்களாக இருந்தாலும், இதுதான் கணக்கு என்று அருள் செய்யாமல் எந்தவிதமான மாறுபாடும் இல்லாமல் ஒருநிகராக அருளுவது இறைவனுடைய பேரருள்திறன்'' என்பதை,

''குணக்குந்தென் றிசைக்கண்ணுங் குடபாலும் வடபாலும்
கணக்கென்ன வருள்செய்வார்கழிந்தோர்க்கும்மொழிந்தோர்க்கும்
வணக்கம்செய் மனத்தராய் வணங்காதார் தமக்கென்றும்
பிணக்குஞ்செய் பெருமானார் பெருவேளூர் பிரியாரே''

என்று ஞானசம்பந்தர் உணர்த்துவார்.

**உதவி :**

நாட்டில் எவ்வளவு செல்வமிருந்தாலும் இயற்கையால் ஏற்படுகின்ற மாறுதல்களால் பஞ்சம் ஏற்படுவதும் உண்டு. அதிக மழை பெய்த காரணத்தாலும், மழையே பெய்யாமல் வறண்ட காலத்திலும் இந்தப் பஞ்சம் ஏற்படுகிறது. அந்தப் பஞ்ச காலங்களில் எல்லாம் இருப்பவர்கள் இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டும். மகரராசியில் சனி புகுகின்ற காலத்தில் இப்படிப்பட்ட சூழல்கள் ஏற்படுவதுண்டு. அந்தக் காலங்களில் உதவி செய்கின்ற கருணையும், கடமையும் ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டு என்பதை ஞானசம்பந்தர்.

''விண்பொய்த் தான்மழைவி ழாதொழியி
னும்விளைவு தான்மிகவுடை
மண்டு பொய்த் தால் வனமிலா தொழியி
னுந்தமது வண்மை வழுவார்''

---

**தகாத செயல்களில் அறிவை செலுத்தாதே**

—சுக்கிரநீதி

என்றும்,

''விலங்கலமர் புலன்மறந்து மீன்சனிபுக்
கூன் சலிக்குங் காலந்தானுங்
கலங்கலிலா மனப்பெருவார் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே''

என எடுத்தியம்புகிறார்.

இப்படிப்பட்ட பஞ்சகாலங்களில் இருப்பவர்கள் பதுக்கலும், அதன் மூலமாக அந்தப் பொருள்களுக்கு விலையையேற்றி விலைவாசி உயர்வதையும், விலைவாசி உயர்வினால் நாட்டு மக்களுக்கு உணவுப்பற்றாக்குறை ஏற்படச் செய்வதும் கூடாது. எல்லோருக்கும் எல்லா நேரங்களிலும் கொடுக்கின்ற தன்மை வளரவேண்டும். இன்று நாளை என்று அவர்களை அலைக் கழிப்பது மக்களுடைய மனதில் எக்காரணம் கொண்டும் அச் சூழல் ஏற்படச் செய்வது கூடாது என்று நம்முடைய அடியார் பெருமக்கள் அருளியுள்ளார்கள். இதனைத் திருஞானசம்பந்தர்,

''வையம்விலை மாறிடினு மேறுபுகழ்
மிக்கிழி விலாத வகையார்
வெய்யமொழி தண்புலவருக்குணரசெ
யாதவவர் வேதிகுடியே''

என்றும்,

''ஏலும் பதிபோலு மிரந்தோர்க் கெந்நாளுங்
காலம் பகராதார் காழிந் நகர்தானே''

என்றும் அருளுவார். உதவி என்பது ஒவ்வொரு மனிதனோடும் ஒன்றி இருக்க வேண்டிய பண்பாகும். அதனால்தான்,

''சகமல அடிமை இல்லை - தானலார்
துணையுமில்லை'' - ''இரப்பவர்க்கு ஈயவைத்தார்
ஈபவர்க்கு அருளும் வைத்தார்'' — என்று அப்பரடிகளும்

உதவி செய்தலின் பண்பைப் பாராட்டி இருக்கிறார்.

**மொழி :—**

பிற உயிரினங்களுக்கு இல்லாத் ஆற்றலாகிய மொழியை மனிதன் கைக்கொண்டு அதன் மூலமாக அவனுடைய தன்மையை உலகுக்குக் காட்டிக் கொள்கிறான். அவன் பிறந்தது முதல், மொழி பேசுகின்ற ஆற்றல்வரும்வரை ''பிறந்து மொழிபயின்று''

---

உழைக்காதவனுக்கு தெய்வம் உதவாது

—ஸோபாகிளிஸ்

என்று காரைக்கால்அம்மையார் உணர்த்துவதுபோல, மொழியை ஒவ்வொரு மனிதனும் தாயைப்போல நேசிக்க வேண்டும். அது அவனது பிறப்பு உரிமைகளுள் ஒன்றாகும். அவன் பிறந்தபோது பேசுகின்ற மொழி எந்தத் தாய்மொழியோ அதற்குத் தன்னுடைய கடமையையும், ஆற்றலையும் வெளிப்படுத்த வேண்டும். அதற்காக அடுத்த மொழியைக் குறைத்தோ, தாழ்த்தியோ பேசுவதற்கு எந்தச் சமயமும் இடங்கொடுக்கவில்லை. இறைவனை வழிபடுகின்றபோது, அந்தந்த மொழியால் இறைவனைப் போற்றினால் இறைவன் அருள்புரிவான் என்பதை,

''கல்லானிழன்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லா வரன்மூன்றும் வெந்து விழவெய்த
றல்லா னமையாள்வா னல்ல நகரானே''

என்றும், ''வடமொழியும், தென்தமிழும், மறைகள் நான்கும்'' என அருளியுள்ளனர். நம்முடைய நாயன்மாரகள் மொழியால் இறைவனைப் பங்கீடு செய்தல் கூடாது என்று மொழி ஒற்றுமையை உணர்த்தி இருக்கிறார்கள்.

**உலகியல் அறிவு :-**

மனிதனுக்கு நூல் அறிவு தேவை. அந்த நூல் அறிவோடு மனிதனுடைய வாழ்க்கை முடிந்துவிடுவதன்று. ஒருவன் நூலறிவோடு மட்டுமிருந்தால், அதோடு மட்டும்தான் வாழ்க்கை நடத்த முடியும். அதற்கு மேலே உலகியல் அறிவு ஒவ்வொரு மனிதருக்கும் இருக்க வேண்டியது இன்றியமையாதது ஆகும்.

—தொடரும்

## சிவகுடும்பம்

சிவன் பெரிய குடித்தனக்காரர், அவருக்கு மலையரசன் மகள் மனைவி, பிள்ளைகளோ மிகப் பெருமை அடைந்தவர்கள். ஒருவர் விநாயகர், மற்றவர் முருகன். இந்தப்பிள்ளைகளைப் பெற்றும் சிவன் பிரம்மச்சாரியாம். உமை கன்னியாம். இது எப்படி?

பரம சிவத்தினின்று பராசத்தியும், பராசக்தியினின்று ஞானசத்தியும் (சிவம்) ஞானசத்தியிலிருந்து கிரியா சத்தியுமாக ஒன்றினொன்று தோன்றுதல்.

ஞானசத்தியும், கிரியாசத்தியும் சமமாகக் கூடிய நிலை சதாசிவ மூர்த்தம்; அம்மூர்த்தி பிரபஞ்ச மெல்லாவற்றையும் தோற்றுவித்து ஐந்தொழிலையும் நடத்துபவர்.

சிவமும் சக்தியும் உலகுயிரனைத்தையும் தோற்று வித்து உயிர்களை கன்மத்துக்கீடாக ஐந்தொழிற்படுத்தினும், இவற்றின் தன்மை பொருந்தாது தோய்வின்றி நிற்கும். விசேட தவத்தாலுண்டாகும் திருவருளைப் பெற்ற ஞானிகளுக்கு சிவமும் சத்தியும் உலகுயிர்களோடு தோய்வின்றி நிற்கும் முறைமை விளங்கும்.

உலகியலில் ஒருதந்தைக்கு தாயிடத்து ஓர் உயிர் மகவாகப் பிறத்தல் போன்றநன்று சிவ குடும்பத்தில் உள்ள தந்தை மகன் முறை.

தேவர்கள் செய்த தீவினையை சூரபத்மன் ஆட்சியில் துன்பத்தால் கழித்தபிறகு, அந்நுகர்ச்சியின் முடிவில் அவர்களைக் காப்பாற்ற துன்பத்திற்கு காரணனாகிய சூரபத்மனை அழிக்க தானே ஆறுமுகம் தாங்கி, தன் ஆற்றலாகிய ஆறுபொறிகளை உண்டாக்கினார். உமையம்மை அவைகளை ஒன்று கூட்டக் கந்தனாயினர். இதனால் இறை வனின் வேறல்ல முருகன். இதுபோலவே விநாயகரும். தன்னின் வேறாகாத தனது ஆற்றலை அதுவும் ஒலியின் வன்மையை, தன்னின் வேறாக்கித் தந்தார். இதுவே உலகப் படைப்பின் முதல் தோற்றம்.

பரம்பொருள் தனக்குத் தானே. ஆற்றலை அதாவது ஞானசக்தியை உலகம் தொழிற்படுவதற்காகப் படைத்துக் கொண்டது. அம்முதற்படைப்பு வாக்கு. அதன் முதன் நிலை பிரணவம். அதுபெற்றகாட்சியுரு கணபதிவடிவம். (கடோபநிஷதம்) இவ்வண்ணம், சிவகுடும்பம் வாக்குவடிவாக ஒருபிள்ளையும், ஆற்றல்வடிவாக ஒருபிள்ளையுமாக விரிந்தது.

தொகுப்பு : **'சித்தாந்த இரத்தினம்' புலியூர் சுப்பிரமணியன்**

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA HO 16/98
Licenced to Post Without PrePayment Under Licence No. 11/98
Posted at Madurai Bazaar Post Office on 16-4-98

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

உழவாரம்

ஆசிரியர் : வடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்
திரு N. திருநாவுக்கரசு B.O.L
9/2 கார்த் 4வது தெரு
T.N. Bank
(அப்பர் இல்லம்)
காரைக்குடி
630002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-



